[2nd July 1962

**திரு. வெ. கிருஷ்ணமூர்த்தி** : பட்ஜெட்டை உரையில் கனம் நிதி அமைச்சர் அவர்கள் இந்த மாடுகளுக்கு இன்ஷுரன்ஸ் திட்டம் கொண்டுவரப்படும் என்ற உறுதிப்பாட்டைக் கூறவில்லை. பட்ஜெட் உரையில் கூறாமல் இருந்தாலும், நடைமுறை ஆண்டில் கொண்டு வருவார்களா என்று அறிய விரும்புகிறேன்.

**கனம் திரு. பூ. கக்கன்** : கனம் நிதி அமைச்சர் அவர்கள் பட்ஜெட் உரையில் சொல்லாவிட்டாலும், மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஒரு லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது என்பதை கனம் அங்கத்தினரின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்பு கிறேன்.

### *Scale of pay of Stockmen (Kanyakumari district)*

* 76 *Q.*—SRI A. SWAMIDHAS (on behalf of SRI A. KUNJAN NADAR): Will the Hon. the Minister for Agriculture be pleased to state—

(*a*) whether the Government have received any representation regrading the fixation of salary of stockmen in Kanyakumari district, transferred from the erstwhile Travancore-Cochin State;

(*b*) if so, the reason for the delay in fixing their salary; and

(*c*) whether any steps are being taken for the recovery of the excess salary paid to them under the Integration Order?

THE HON. SRI P. KAKKAN : (*a*) Yes, Sir.

(*b*) As the particulars regarding the fixation of pay received from the Director of Animal Husbandry were found defective and incomplete, further particulars have been called for and they are awaited.

(*c*) Yes, Sir.

### *Mavali tank (construction of dam)*

* 77 *Q.*—SRI S. MADHAVAN : Will the Hon. the Minister for Agriculture be pleased to state—

(*a*) whether there is any proposal to construct a dam at Mavali tank, in Tirupattur taluk, Ramanathapuram district; and

(*b*) if so, when?

THE HON. SRI P. KAKKAN : (*a*) Yes, Sir.

(*b*) The Board's proposals have just been received and are under examination of the Government.

### இலவசக் கல்லூரிப் படிப்பு.

* **79 கேள்வி.—திரு. அ. கு. சுப்பையா** : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

எல்லா மாணவர்களுக்கும் கல்லூரி படிப்பு வரை இலவசமாக படிக்க ஏற்பாடு செய்ய உத்தேசமுண்டா ?